REGD. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




மலர்: 3 (●) சென்னை 26—3—1979 திங்கள் (★)❋●❋(★) வெளியீடு: 27—3—1979 செவ்வாய் (●) இதழ்: 158

## நகர்ப்புற நில உச்ச வரம்பிலிருந்து மருத்துவமனைக்கு வரி விலக்கு

—அமைச்சர் எஸ். டி. எஸ்.



## நன்கொடை தருபவருக்கு வருமான வரிச்சலுகை தாராளமாகத் தருக

## மத்திய அரசுக்கு



## சாவி என்னிடம் இருந்தாலும்முதல்வர் சம்மதம் இல்லாமல் தொடமாட்டேன்

—நிதியமைச்சர் நாஞ்சிலார்

# புரட்சித்தலைவர் கோரிக்கை

## சட்டப்பேரவையில் கேள்வி நேரத்தில் தி.மு.க. வெளிநடப்பு

சென்னை, மார்ச் 26— சட்டப்பேரவையில கேள்வி நேரத்தின்போது இன்று காலையில் தி மு க வினர் வெளிநடப்பு செய்தனர்.

கேள்வி நேரத்திற்கு முன்பே திமுக உறுப்பினர் கிட்டப்பா ஒரு ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பினார்.

"நந்தனார் பிறந்த ஊரான மேலாநல்லூரில் அரிசன மக்களுக்கு வீடுகள் கட்டும் திட்டம் பற்றி 41வது விதியின்கீழ் ஒரு கவன ஈர்ப்புத் தீர்மானம் கொடுத்திருந்தேன், பிறகு அதை குறுகிய கால வினாவாகவும் கொடுத்திருந்தேன். சம்பந்தப்பட்ட துறையில் கேட்டபோது தகவல்கள் அனுப்பப்பட்டுவிட்டன என்று தெரிவித்தார்கள். அதை குறுகிய கால வினாவாகவும் எடுத்துக்கொள்ளவில்லை. கவன ஈர்ப்புத் தீர்மானமாகவும் எடுத்துக் கொள்ளவில்லை. இந்தப் பிரச்சினையை குறுகியகால வினவாக எடுத்துக்கொண்டால் என்ன குடிமுழுகிப் போய்விடும்? தி. மு. க. ஆட்சிக் காலத்திலேயே கட்டத் துவங்கிய பணி இன்னும் முடியவில்லை. எனவேஇந்தப்பிரச்சினையை எழுப்பினேன்.

'சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால் கோடாமை சான்றோர்க்கு அணி' என்ற குறள்போல் தாங்கள் சான்றோர் என்பதில் எனக்கு ஐயமில்லை என்னுடைய உணர்வுகளை வெளிப்படுத்தும் வகையில் நான் வெளிநடப்புச் செய்கிறேன்" என்று கூறியபடி கிட்டப்பா வெளியேறினார்

### அழைப்பு

அப்போது சபாநாயகர் முனு ஆதி, 'கிட்டப்பா அவர்கள் நான்சொல்வதைக் கேட்டுக் கொண்டு போகலாம் என்றார்.

தி மு க உறுப்பினர் நடராசன் என்பவர் கிட்டப்பாவை வெளியே போக வேண்டாம் என்று தடுத்தார்,

'போய்யா' என்று கூறிவிட்டு அவர் வெளியேறிவிட்டார்,

சாதிக்பாட்சா எழுந்து, "கிட்டப்பாவின் பிரச்சினையை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்" என்றார்.

### சபாநாயகர் விளக்கம்

சபாநாயகர் முனு ஆதி கிட்டப்பா அவர்கள் என்னுடைய அறைக்கு வந்து, தன்னுடைய வேதனையை வெளிப்படுத்தி இதனைப் பற்றிக் கூற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதனாலேயே அனுமதித்தேன். கேள்வி நேரத்தின் போது எந்த விதியின் கீழும் இது போன்ற பிரச்சினைகள் எழுப்ப முடியாது. கிட்டப்பாவினுடைய பிரச்சினையை கவனிக்கும்படி கூறியிருக்

(2 ம் பக்கம் பார்க்க)



சென்னை, மார்ச் 26- நன்கொடை கொடுப்பவர்கட்கு வருமானவரிச் சலுகையை தாராளமாகத் தர வேண்டும் என்று மத்திய அரசை முதல்வர் புரட்சித் தலைவர் கேட்டுக் கொண்டுள்ளார்.

நன்கொடைத் தொகையை மொத்த வருமானத்தில் இருந்துகழித்து மீதத்திற்கு வரி விதிக்க வேண்டும் என்று பல ஆண்டுகட்கு முன்பே வற்புறுத்தியதாகவும் முதல்வர் தெரிவித்தார்,

எல்லாவற்றிற்கும் வரி விதித்து பிறகு நன்கொடைத் தொகைக்கு வரி விதிக்கும் முறையில் மேலும் கடன் ஏற்படும் அதற்கு நானே சாட்சி என்றும் புரட்சித்தலைவர் தெரிவித்தார்.

நுங்கம்பாக்கத்தில் ரூ. 135 லட்சம் செலவில் அமைய இருக்கும் சங்கர நேத்திராலயாவின் புதிய மருத்துவநிலையத்தை முதல்வர் துவக்கிவைத்தார்

விழாவுக்கு நிதி அமைச்சர் நாஞ்சிலார் தலைமை வகித்தார, மருத்துவ ஆராய்ச்சி நிறுவனத்திற்கு வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ். அடிக்கல் நாட்டினார்,

விழாவுக்கு வந்திருந்தவர்களை டாக்டர் மோகன்ராவ் வரவேற்றார்.

இந்த அமைப்பின் கவுரவச் செயலாளர் வி. டி. சாமி இதன் நோக்கங்களை விவரித்தார. ரூ. 135 லட்சச் செலவில் இது அமைக்கப்படும் என்றும் இந்த இடத்திற்கு நகர்புற நில உச்சவரம்பில் இருந்து விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:

இப்படிப்பட்ட நல்ல காரியத்தில் பங்கு கொள்வது மிகமிக மகிழ்ச்சிக்குரியதாகும்.

அதிலும் கண் பார்வையைத் திருப்பித் தரும் மாபெரும் கடமையைச் செய்ய பல்லோரும் ஒருங்கிணைந்து இப்படிப்பட்ட அமைப்பை உருவாக்கி இதற்கு நல்ல பெயரில் சங்கர நேத்திராலயா" என்னும் பெயரும் இட்டு இருக்கிறீர்கள்.

இந்த அளவுக்கு நாட்டுக்கு சேவை செய்ய ஆர்வம் கொண்டு வழிகாட்டி இருக்கிறீர்கள்.

ஒரு நாட்டில் ஆட்சியில் இருப்பவர்கட்கு ஆசை-எண்ணங்கள் ஏராளம் இருந்தாலும் அதனை மக்கள் தரும் வரிப்பணத்தில் இருந்துதான் ஓரளவு செய்யமுடிகிறது

### வள்ளல் தன்மை

அத்தகைய நேரத்தில் லட்சப் லட்சமாக வாரிவழங்கி தனிப்பட்டவர்கள்- அமைப்புகள் மூலம் தொண்டாற்றும் ஆர்வம் ஏற்பட வாரி வழங்கிய வள்ளல் தன்மையைப் பாராட்டுகிறேன்.

அரசு செயல்கள்மூலமும் தனிப்பட்டவர்கள் முயற்சிகள் மூலமாகவும் நாட்டு மக்கள் நன்மை பெற முடிகிறது என்பதைக் கண்டு வருகிறோம்,

நாட்டில் எப்படிப்பட்டவர்கள் இருக்கிறார்கள். எப்படிப்பட்ட நிறுவனம் தேவை என்பதுபற்றி இங்கே வரவேற்புரையில் தெரிவித்தனர்.

டாக்டர் பத்ரிநாத்துடனும், அகர்வாலுடனும் நீண்டநாள்தொடர்பு இல்லாவிட்டாலும் அண்மைக்காலதொடர்பாக இருந்தாலும் அவர் திறமை என் வாழ்விலும் பயன் படும் அளவுக்குப் பெற்று இருக்கிறேன்,

அவரது கடமைஉணர்வு நாட்டில் இருக்கும் இவைகளை எண்ணிப் பார்க்கும்போது இப்படிப் மருத்துவமனைப் படிகளில் ஏறிப்பார்க்க யாத மக்களுக்குப் தோர் வாய்ப்பை துணிவைப் கிறேன்

### தியா...

இந்தவகையில் உடைமையைத் தியாகம் செய்யும்போது தியாகம் என்ற வார்த்தைக்குப் பொருள் தெரிய முடிகிறது.

ஒரு சமயம் ஒரு குருடர் அநாதைப் பள்ளிக்கு சி. சுப்பிரமணியத்துடன் சென்று இருந்தேன் அன்று பொங்கல் பண்டிகை பொங்கல் வழங்கினோம்.

பிறகு உள்ளே சென்றபோது அவர்கள் எம். ஜி. ஆர் எங்கே என்று கேட்டனர்.

அவர்களுக்குப் பார்வை தெரியாது. ஆகவே நான்தான் எம்ஜிஆர் என்றேன், அவர்கள் நம்பமுடியாது என்றார்கள்.

சி, சுப்பிரமணியமும் எம்ஜிஆர்தான் என்றார். ஆனல் அவர்களோ குரல் மாறி இருக்கிறதே என்று சொன்னார்கள்.

எதைக்கொண்டு சொல்கிறீர்கள் நான்தான் எம். ஜி. ஆர் என்று மீண்டும் சொன்னேன்.

நாங்கள் சினிமாப் பார்க்கிறோம் என்றனர் எப்படி புரிய முடிந்தது என்று கேட்டேன் பக்கத்தில் இருப்பவர்கள் சொல்வ அதனை மனதில் பதிய வைத்துக் கொள்வோம் என்று சொன்னார்கள்.

### கண்ணீர் உகுத்த காட்சி

நாடகமேடையில் கால் முறிவு ஏற்பட்டு கால்கட்டுடன் படுத்து இருந்தேன். அப்போது சில இளைஞர்கள் என்னைப் பார்க்க வந்தனர்.

வந்தவர்கள் கண்ணீர்விட்டனர். காலைத் தொட்டுப் பார்க்கலாமா என்று கேட்டனர், பிறகு தான் அவர்களுக்குக் கண் தெரியாது என்று தெரிந்தது.

என் கால் கட்டைத் தொட்டுப்பார்த்து சீக்கிரம் குணம் அடைவீர்கள் என்று சொன்னார்கள்,

கண்பார்வை தெரியாது என்பதால் எங்களை உள்ளே விட மறுத்தனர். எப்படிப் பார்ப்பீர்கள் என்று சொல்லி தடுத்தனர் எங்களால் எப்படிப் பார்க்க முடியும் என்பது அவர்கள் சொன்னது- என்னல் மறக்க முடியாத ஒன்றாகும்,

கோடி கோடியாகக் கொட்டிக் கொடுத்தாலும் அவர்களுக்கு பார்வை இல்லை என்றால் அப்படிப் ...வர்கள் உள்ளத்தில் ...ழ்வு ஏற்பட முடியாது. ஆகவே பத்ரிநாத்தும் ...வாலும் பல்லாண்டு ...த்தோடு வாழவேண்டும்

### ...ன்னதை ...ய்து நிம்மதி

...ந அரசு என்ன செய்யும் என்று கேட்டால் ...களால் முடிந்ததைச் ...ய்கிறோம், நல்ல எண்ணத்துடன் செயல்படும்போது ஒரு நிம்மதி ஏற்படும்.

நூறில் ஒன்றைச் செய்தால்கூட நிம்மதி ஏற்படும். அப்படிப்பட்ட வாய்ப்பை தமிழக அரசு பெற்று இருக்கிறது.

### ஒற்றுமை பிணைப்பு

இங்கே எஸ், டி. எஸ் சும், நாஞ்சிலாரும் பேசி

2ம் பக்கம் பார்க்க

## பேச்சு நடத்த என். ஜி. ஓ.க்களுக்கு அரசு அழைப்பு

### அமைச்சர் பண்ருட்டி தகவல்

சென்னை, மார்ச் 26 பேச்சுவார்த்தை நடத்த வருமாறு என். ஜி. ஓ க்களுக்கு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் அழைப்பு விடுத்தார்.

என்.ஜி.ஓ.க்கள் உண்ணாவிரதம்பற்றிசட்டசபையில கொண்டுவரப்பட்ட ஒத்திவைப்பு தீர்மானத்துக்கு பதிலளித்து அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசினார் அவர் கூறியதாவது:

போராட்டம்நடத்துகிறவர்களின் கோரிக்கைகளில் நியாயம் இருப்பது போலவே அரசு தரப்பிலும் நியாயங்கள் உள்ளன அரசைநடத்திச்செல்வதில் என். ஜி. ஓக்களின் பங்கு முக்கியமானது.

என். ஜி. ஓ,க்கள். அரசின் நிலைமைகளை உணர்ந்தவர்கள் அவர்கள ஏன் இந்த நிலையை மேற்கொள்கிறார்கள் என்பது புரியவில்லை.

மூன்றாவது சம்பளக் குழுவில் முரண்பாடு இருக்கக் கூடாது என்பதால் நீதிபதி தலைமையில் குழு அமைத்தோம். அந்த குழு 18 நகரங்களில் 1,361 பிரதிநிதிகளை சந்தித்து தனது அறிவிப்புகளை வெளியிட்டது,

அதில் சில முரண்பாடுகள் இருப்பதாக பிரதிநிதிகள் வந்து சொன்னபோது அந்த குறைபாடுகளை நீக்கி அரசு உத்தரவிட்டது.

பிரதிநிதிகளின் குறைகளை கேட்டு உத்தரவிடும்சூழ்நிலை உள்ளது. முரண்பாடு குழு ஒன்று தேவையில்லை.

மத்தியஅரசு தருகிறபடி நாமும் அகவிலைப்படி கொடுக்கிறோம் மத்திய அரசு அடுத்த அறிவிப்பை பார்த்து அரசு தனது முடிவை அறிவிக்கும்.

ஓய்வு பெற்றவர்களுக்கு ரூ. 10 ஆயிரம் வழங்கும் திட்டத்தை செயல்படுத்த எவ்வளவு செலவாகும் என்பதை உணரவேண்டும். அது நமது நிதி நிலைக்கு ஏற்றதா என்பதை ஆலோசிக்க வேண்டும் அது நமது நிதிநிலைக்கு ஏற்றதல்ல,

ஓய்வு பெறும் வயதை உயர்த்தக் கோருகிறார்கள் சமுதாய நலன் அடிப்படையில் இந்த பிரச்சினையை அணுக வேண்டும், பேச்சுவார்த்தைமூலம் பிரச்சினைகளை தீர்த்துக் கொள்ள வருமாறு கேட்டுக்கொள்கிறேன், சாகும் வரை உண்ணாவிரதம் என்பது தேவையற்றது.

அமைச்சரின் விளக்கம் தங்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை என்று கூறி கம்யூனிஸ்டுகள் வெளிநடப்புச் செய்தனர்.

அமைச்சரின் விளக்கத்துக்குப்பின் ஒத்திவைப்புத் தீர்மானத்துக்கு சபாநாயகர் அனுமதி மறுத்தார்.

ஜெ பி க்கு சிகிச்சை

## லண்டன் மருத்துவ நிபுணர் வருகை

பம்பாய், மார்ச் 26- ஜெயப்பிரகாஷ் நாராயணனுக்கு சிகிச்சையளிக்க லண்டன் மருத்துவநிபுணர் டாக்டர் மார்ஸ்டன் இன்று பம்பாய் வந்து சேர்ந்தார், ஜஸ்லோக் மருத்துவமனை அதிகாரிகளுடன் இதுவரை அளித்து வரும் சிகிச்சை பற்றி அவர் ஆலோசனை நடத்தினார். அதன்பின் ஜெயப்பிரகாசருக்கு சிகிச்சை அளிக்கத் தொடங்குவார் லண்டன் மிடில் செக்ஸ் மருத்துவமனை டாக்டர் இவர்.

மயிலை மாங்கொல்லையில் இன்று (26-3-79) மாலை 6 மணிக்கு

## முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகிறார்

## கழக நாடாளுமன்ற உறுப்பினர் அசோக்ராஜ் வீட்டுக்குத் தீவைப்பு

பெரம்பலூர், மார்ச் 26- பெரம்பலூர்தொகுதிகழக நாடாளுமன்ற உறுப்பினர் அசோக்ராஜின் சொந்த ஊர் பெரம்பலூரிலிருந்து 21 மைல் தூரத்தில்உள்ள ஒகளூர் என்ற கிராமம் ஆகும்,

ஒகளூர் கிராமத்திலுள்ள அசோக்ராஜின் வீட்டிற்கு கடந்த 16 ஆம் தேதி பட்டப்பகலிலேயே யாரோ விஷமிகள் தீ வைத்து விட்டனர். நல்ல வேளையாக அப்போது வீட்டில் யாரும் இல்லை.

அசோக்ராஜின் தாயார் வீட்டைப் பூட்டிவிட்டு பக்கத்து கிராமத்திற்குச் சென்று இருந்த நேரத்தில் வீட்டிற்கு தீவைக்கப்பட்டு இருக்கிறது.

தீவிபத்தில் பாத்திர பண்டங்கள், தானியங்கள் துணிமணிகள் கருகி நாசமாயின. சேதமதிப்பு 15 ஆயிரம்ரூபாய்க்கும் அதிகம்

தீவைப்புசம்பவம் நடந்த போது அசோக்ராஜ் தொகுதியில் சுற்றுப்பயணம் செய்துவிட்டு கீழச்செருவாய் ஓய்வு மாளிகையில் தங்கியிருந்தார்.

தகவலறிந்ததும் அசோக்ராஜ் ஒகளூருக்கு விரைந்து சென்றார்.

தீயணைப்புப் படையினரின் கடும் போராட்டத்தாலும், அக்கம்பக்கத்திலுள்ளவர்களின் தீவிர முயற்சியாலும் அக்கம் பக்கத்திலுள்ள வீடுகள் தீக்கிரையாகாமல் தப்பின.

இச்சம்பவம் குறித்து போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது. போலீசார் தீவிரமாகப் புலன் விசாரணை செய்துவருகிறார்கள்.

## அகதிகளை சுரண்டும் தரகர்கள் மீது நடவடிக்கை: பிடிஎஸ் தகவல்

சென்னை, மார்ச் 26- அகதிகளுக்கு அரசிடம் உதவி வாங்கித்தருவதாகக் கூறி அவர்களிடம் மோசடி செய்யும் இடைத்தரகர்கள் மீதுநடவடிக்கை எடுக்கப் பட்டிருப்பதாக சமூகநலத் துறை அமைச்சர் பி. டி. எஸ். தெரிவித்தார்.

சட்டசபையில் அமைச்சர் பி. டி. எஸ். கூறியதாவது:-

இலங்கை, பர்மா போன்ற நாடுகளிலிருந்து வரும் அகதிகளிடம் அரசு உதவிகள்பெற்றுத் தருவதாகக் கூறிசில இடைத்தரகர்கள் மோசடி செய்வதாக புகார்கள் வந்தன. இடைத்தரகர்களை தடுக்க தனி போலீஸ்படை அமைப்பதற்கு மத்திய அரசிடம் அனுமதி கேட்கப்பட்டது.

மாநில போலீஸ்மூலமே நடவடிக்கை எடுக்குமாறு மத்திய அரசு அறிவித்து விட்டது.

இலங்கையிலிருந்துவரும் அகதிகளிடம் மண்டபத்திலேயே தரகர்கள்போல் வேலை வாங்கி தருவதாகக் கூறி பாஸ்போர்ட், டிராப்ட் போன்றவற்றை வாங்கிக் கொள்கிறார்கள்.

ஏமாற்ற முயன்றதாக

(2 ம பக்கம பார்க்க)

# சென்னை கடலோரத்தில் தடுப்பு சுவர் அமைப்பு

சென்னை, மார்ச் 26 சென்னை கடலோரப் பகுதியில் தடுப்புச்சுவர் அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது.

சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது நிதி அமைச்சரின் பேரவைச் செயலர் நாஞ்சில் வின்சென்ட் கூறியதாவது:

சென்னைப்பட்டினப்பாக்கத்திலிருந்து கலங்கரை விளக்கம் வரை கடலோரத்தில் கடல் அரிப்பை தடுக்க 300 மீட்டர் மற்றும் 200 மீட்டர் நீளத்தில் தனித்தனியாக தடுப்பு சுவர்கட்ட தமிழக அரசு நடவடிக்கை எடுத்து வருகிறது.

இதற்காக ரூ. 10 லட்சத்து 30ஆயிரம் அளவுக்கு மதிப்பீட்டை தயாரித்து தலைமைப் பொறியாளர் அரசுக்கு அனுப்பியுள்ளார். அரசு இதை பரிசீலித்துவருகிறது.

இவ்வாறு நாஞ்சில் வின்சென்ட் கூறினார்.

அமைச்சர் சவுந்தரபாண்டியன் தகவல்

# அரிசன மக்களுக்கு உடனுக்குடன் வீட்டு மனை கொடுக்க சட்டம்

சென்னை, மார்ச். 26— அரிசன மக்கள் வீட்டுமனை கேட்டால் பேரன் காலத்தில் கொடுக்கப்பட்டு வந்த நிலையை மாற்றி கேட்டவர் காலத்திலேயே கொடுக்கவே நில ஆர்ஜித சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது என்று அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்

அரிசன மக்களின் நலன் கருதி வீட்டுமனை கையகப்படுத்தும் நில ஆர்ஜித சட்டம் எந்தத்தேதியில் நிறைவேற்றப்பட்டது? குடியரசுத்தலைவர் ஒப்புதல் எப்போது கிடைத்தது? இன்னும் அமல்படுத்தாமைக்கு காரணம் என்ன என்று கழக உறுப்பினர் தாமரைக்கனி மற்றும் மாரக்கபந்து (உழைப்பாளர் முன்னேற்றக்கட்சி) ஆகியோர் கேட்டனர்.

இதற்குப் பதில் அளிக்கையில் அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறியதாவது:

அரிசன மக்களின் நலன் கருதி வீட்டுமனை கையகப்படுத்தும் நில ஆர்ஜித சட்டம் 4-4-78 அன்று சட்டசபையில் நிறைவேற்றப்பட்டது.

இதற்கு 21-7-78 அன்று குடியரசுத் தலைவர் ஒப்புதல் கிடைத்தது.

இந்த சட்டத்தின் விதிமுறைகள் சம்பந்தமாக வருவாய்வாரியம், அரிசன நலத்துறை, ஆதிவாசிகளின் நல இயக்குநர் சட்டத்துறை ஆகியவற்றின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டது இப்பொழுது 1-3-79 அன்று சட்டத்துறை கேட்ட விளக்கங்களுக்கு பதில் வருவாய்வாரியத்திலிருந்து பெற வேண்டியிருக்கிறது.

தாமரைக்கனி: வீட்டுமனை கேட்டு அரிசன மக்கள் மனு போட்டால் பேரன் காலத்தில் தான் கிடைக்கும் என்ற நிலை மாற்றப்படுமா?

அமைச்சர் சவுந்தரபாண்டியன்: பேரன் காலத்தில் கிடைத்துவந்ததை அப்பன் காலத்திலேயே கிடைக்க இந்த அரசு வழி செய்துள்ளது. இந்த சட்டம் அமலுக்கு வந்தால் வீட்டுமனை கேட்டவர் காலத்திலேயே கிடைக்கும்.

இந்தத்துறைக்கென 28 தாசில்தார்களை ஏற்படுத்த வேண்டுமென கூறப்பட்டது. 15 தாசில்தார்கள் போதும் என்று நிதித்துறை கூறியிருக்கிறது.

இதற்கு 28 தாசில்தார்கள் வேண்டும் என்று வலியுறுத்தி யிருக்கிறேன். ஒப்புதல் கிடைத்தவுடன் அரிசன மக்களுக்கு கால தாமதம் இல்லாமல் நன்மை செய்ய முடியும்.

இவ்வாறு அரிசன நலத்துறை அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்.

அசோக்லேலண்டை நவீனப்படுத்தி

# மேலும் 2200 பேருக்கு வேலை தர புரட்சிதலைவர் ஒத்துழைப்பு

சென்னை மார்ச் 26— அசோக்லேலண்ட் தொழிற்சாலையை விரிவுபடுத்தி மேலும் 2200 பேருக்கு வேலை அளிக்க தமிழக அரசு முழு ஒத்துழைப்பு தரும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் தெரிவித்தார் என்று இதன் நிர்வாக இயக்குநர் கே. ராமச்சந்திரன் நிருபர்களிடம் கூறினார்.

ரூ. 52 கோடி செலவில் விஸ்தரிப்பு திட்டத்தை அசோக் லேலண்ட் தயாரித்துள்ளது இதன் மூலம் மேலும் 2,200 பேர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்படும்.

இங்கிலாந்தில் உள்ள அசோக லேலண்ட் தயாரித்துள்ள புதிய பேருந்தின் வசதிகளை நிருபர்களிடம் கே. ராமச்சந்திரன் விளக்கினார்.

சப்தம்-ஆட்டம் குறைவாகக் கொண்டது பயணிகள் ஏறி இறங்க தனித்தனியான வழிகள் அதில் அகலமான கதவுகள்-மேல் பக்கத்தில் இருந்து காற்றுவர வசதி கோடை காலத்தில் குளிர் காற்று குளிர் காலத்தில் கதகதப்பான காற்று வர வசதி. தரையில் இருந்து அதிக உயரம் இல்லாத வகையில் உள்ளே போக வசதி இத்தனையும் கொண்ட புதிய பேருந்தை அசோக் லேலண்ட் தயாரிக்க இருக்கிறது.

இன்னும் ஓராண்டில் நமது நாட்டு நிலைக்கு ஏற்ப திருத்தங்களுடன் இப்படிப்பட்ட பேருந்துகள் உற்பத்தியாகத் துவங்கும் என்று அவர் விளக்கினார்.

கண்டக்டர் இன்றி ஓட்டுநரே இந்த பேருந்தை கவனித்துக் கொள்ள முடியும்.

முன்பக்கவழியாக பயணிகள் ஏற வேண்டும். நடுவில் இருக்கும் வழியாக இறங்க வேண்டும், நடுவில் இருக்கும் கதவை ஓட்டுநர் இருக்கையில் இருந்தபடியே மூடி திறக்க வசதியிருக்கிறது. அதைக் கண்காணிக்கவும் வசதி செய்யப்பட்டுள்ளது.

புதியப் பேருந்தில் நிருபர்கள் ஏறி சிறிது தூரம் சென்று வந்தனர்.

# பி.டி.எஸ். தகவல்

(முதல்பக்கத்தொடர்ச்சி)

புதுக்கோட்டையில் 6 பேர் கைது செய்யப்பட்டனர். 9 நபர்கள் மீது திருச்சி ஜுடிசியல் நீதிபதி கோர்ட்டில் 8 வழக்குகள் போடப்பட்டுள்ளன.

அகதிகளுக்கு தொழில் செய்ய அரசு ரூ. 5 ஆயிரம் கொடுக்கிறது முதலில் ரூ. 3 ஆயிரமும், அந்த தொகை முறையாக தொழிலுக்காக செலவிடப்பட்டிருந்தால் மேலும் ரூ. 2 ஆயிரமும் வழங்கப்படுகிறது.

இவ்வாறு கடன் வழங்குவதில் அரசு செவ்வனே செயல்படுகிறது.

இவ்வாறு அமைச்சர் பி.டி.எஸ் கூறினார்.

# முதல்வர் கோரிக்கை (முதல்பக்க தொடர்ச்சி)

டதைக் கேட்டு இருப்பீர்கள்.

எந்த அளவுக்கு பிணைப்போடு ஒன்று சேர்ந்து பணியாற்ற துடித்துக் கொண்டு இருக்கிறோம் என்பதை நீங்கள் புரிந்து கொள்ள முடியும்.

அரசிடம் உதவி கேட்பதற்கு எல்லோருக்கும் சம உரிமை இருக்கிறது, மனிதன் திட்டமிடுகிறான், நிதி மந்திரி முடித்துவைக்கிறார் என்றார் இங்கே வரவேற்புரை கூறியவர்.

## சாவிஎங்கே?

நாஞ்சிலார் பேசும்போது சாவி என்னிடம் இருப்பதாக நாஞ்சிலார் தெரிவித்தார் சாவி என்னிடமும் இல்லை.

மக்களிடம் தான் இருக்கிறது. மக்கள் கருத்துப்படி தான் செயல்பட முடியும்.

இங்கே அமர்ந்து இருக்கும் நாகிரெட்டியார் சிறப்பாக காரியம் ஆற்றுபவர். அவர் ஒரு மருத்துவ மனையைக் கட்டி இருக்கிறார். இதன் மூலம் பல உயிர்களுக்கு உத்தரவாதம் அளித்து இருக்கிறார்.

அதுபோல நல்லவர்கள் ஒன்று கூடி மக்களை வாழவைக்க சங்கர நேத்திராலயா என்ற அமைப்பு உருவாக்க முன் வந்துள்ளது மக்கள் செய்த பாக்கியம் ஆகும்.

நன்கொடை பற்றிகுறிப்பிட்டார்கள் பணம் இருப்பவர்கட்கு நிதிதர மனம் இருப்பதில்லை மனம் இருப்பவர்கட்கு பணம் கிடைப்பதில்லை. இரண்டும் சேர்ந்தால் சட்டம் குறுக்கிடும்.

## நன்கொடையும் வருமான வரியும்

இந்த நிறுவனத்திற்கு நன்கொடை தந்தால் அதற்கு 100 சதவிகித வருமானவரி சலுகை என்று சொன்னார்கள் இது மகிழ்ச்சிக்குரியதாகும்.

இப்படிப்பட்ட காரியங்களுக்கு நன்கொடை தரும் போது அதை வருமானவரி கணக்கிற்கு மொத்த வருமானத்தில் இருந்து கழிக்கவேண்டும். மீதிக்கு வரிவிதிக்க வேண்டும்.

இப்படிப்பட்ட முறை வேண்டும் என்று சி. சுப்பிரமணியம் நிதி அமைச்சராக இருந்த காலத்திலேயே தெரிவித்தேன்.

ஒருவருக்கு ரூ 10 லட்சம் வருமானம் என்றால் அதில் அவர் ஒரு லட்சம் நன்கொடை தந்தால் 10 லட்சத்திற்கும் வரி விதித்து பிறகு ஒரு லட்சத்துக்குரிய வரியை குறைத்துக்கணக்கிடுகிறார்கள். இதுஎப்படி சரியாகும் என்றுகேட்டேன்

ஒருவருக்கு ரூ 1 லட்சம் வருமானம் இருந்து அதில் 50 ஆயிரம் நன்கொடை அளித்தால் ஒரு லட்சத்திற்கும் வருமானவரிகணக்கிட்டு பிறகு 50 ஆயிரத்துக்கு உரியவரியை குறைத்தார்கள்.

## நானே சாட்சி

இப்படிப்பட்ட முறையினால் மேலும் மேலும் கடன்தான் ஏற்படும். அதற்கு நானே சாட்சியாக இருக்கிறேன்.

இப்படி விகிதாசார முறையில் வரி போடுவது சரியல்ல என்று அன்றே சொன்னேன். இன்று முதலமைச்சா என்ற நிலையிலும் சொல்கிறேன்.

மத்திய அரசிடம் இதற்கு அதிகாரம் இருப்பதால் இதனைச் சொல்கிறேன்.

எடுப்பது குறைவாகவும் கொடுப்பது அதிகமாகவும் உள்ள நிலை நாட்டில் உருவாக வேண்டும்,

அதற்கு நாட்டுமக்களும் நோயற்று இருக்கவேண்டும். அந்த நல்ல காரியம் நடந்து கொண்டு இருக்கிறது.

## அரசு உதவும்

இந்த நிறுவனத்தை தமிழக அரசு அநாதையாக விட்டுவிடாது நல்ல காரியங்களை நிறைவேற்ற தமிழக அரசு பக்கபலமாக இருக்கும்.

இதனை நான் சொல்லும் போது நிதி அமைச்சர் சாவி எங்கே என்று கேட்க மாட்டார் என்று நம்புகிறேன்.

அவரை எப்போது சந்திக்கவேண்டுமோ அப்போது சந்தித்துக் கேளுங்கள். நெருக்கடி ஏற்படும் போது சந்தியுங்கள்,

பத்ரிநாத் கொஞ்சம் கூடக் கவலைப்பட வேண்டாம், துணிவோடு தொடரட்டும் மக்கள் உங்கள் பக்கம் இருப்பார்கள். நாங்கள் உங்கள் பின் இருப்போம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

## நாஞ்சிலார்

விழாவுக்கு தலைமை வகித்து நிதி அமைச்சர் நாஞ்சிலார் கூறியதாவது.

கண் பார்வை மிகவும் முக்கியமானது ஆகும் இந்தியாவில் 20 லட்சம் குருடர்கள் இருக்கிறார்கள். இதில் தமிழகத்தில் ஒரு லட்சம் பேர் இருக்கிறார்கள்

சத்துணவு இல்லாமை பொருளாதார வசதிக்குறைவு தரமான மருந்து கிடைக்காத நிலை இவைகளும் இதற்குக் காரணமாக இருக்கின்றன.

இந்த அரசு இப்படிப்பட்ட குறைகளைப் போக்குவதில் அக்கறை கொண்டு இருக்கிறது.

கிராமப்புற மக்களுக்கு உதவ நடமாடும் மருத்துவ மனைகளை அமைத்து வருகிறோம். இலவச கண் சிகிச்சை முகாம்களை அரசு நடத்தி வருகிறது.

இப்படிப்பட்ட காரியங்களுக்கு அரசுஉதவிபுரியும். நான் நிதி அமைச்சராக இருந்தாலும் சாவி முதல்வரிடம் இருக்கிறது.

சாவியை என்னிடம் தந்து இருந்தாலும் முதல்வரது சம்மதம் இல்லாமல் பயன்படுத்தமாட்டேன்.

எந்த உதவி தேவையானாலும் கேளுங்கள். நிதிநிலைக்கு ஏற்ப முதல்வர் அனுமதியோடு தருவேன்.

இவ்வாறு நாஞ்சிலார் கூறினார்.

## அமைச்சர் எஸ்.டி.எஸ்.

வருவாய்த்துறை அமைச்சர் எஸ் டி எஸ் பேசியதாவது:

தென்கிழக்கு ஆசியாவிலேயே தலைசிறந்த மருத்துவ ஆராய்ச்சி நிலையமாக இது அமைய இருக்கிறது. இந்த நல்ல காரியத்திற்கு வசதி படைத்தவர்கள் உதவமுன் வரவேண்டும்.

இப்படிப்பட்ட திட்டங்களுக்கு உதவும் மனம் படைத்தவர் முதல்வராக இருக்கிறார்.

இங்கே உள்ள இடத்திற்கு நகர்ப்புற நில உச்சவரம்பில் இருந்து விதிவிலக்கு வேண்டும் என்று கேட்டார்கள், அப்போது நான்கூட அதனைக் கவனிக்கவில்லை.

ஆனால் புரட்சித்தலைவர் என்பக்கம் திரும்பி நான் பேசும்போது 'சரி' என்று சொல்லச் சொன்னார்.

இதனை அவரே சொல்லி இருக்க முடியும். தாமதம் ஆக்க கூடாது என்ற ஆர்வத்தில் சொல்லச் சொன்னார்.

நாஞ்சிலார் பேசும் போது சாவி முதல்வரிடம் இருப்பதாக சொன்னார். அண்ணனிடம் தம்பி அனுமதி பெற்றுச் செயல்படுவது போல நாங்கள் செயல்படுகிறோம்.

எங்காவது ஓர் இரு நாள் தாமதம் என்று ஏற்பட்டால் அது அண்ணனிடம் அனுமதி பெறுவதற்காகத் தான் இருக்கும் இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். பேசினார்.

டாக்டர் பத்ரிநாத், சி. யு.ஷா ஆகியோரும் விழாவில் பேசினார்கள்,

விழாவின்போது பலர் நன்கொடை அளித்தனர் விழா இறுதியில் வைத்தி சுப்பிரமணிய அய்யர் நன்றி கூறினார்.

# தி. மு. க. வெளிநடப்பு

(முதல்பக்கத தொடர்ச்சி) கிறேன்.

உறுப்பினர் வெளியே இருந்தால் உள்ளே வரும்படி நான் அன்புடன் அழைக்கிறேன் என்றார்.

சாதிக்பாட்சா எழுந்து வெளியே சென்று, சற்று நேரத்திற்குள் உள்ளே வந்து எதிர்க்கட்சியின் உரிமைகள் பறிக்கப்படுகின்றன. சட்டசபை இயங்குகின்றமுறை சரியில்லை என்ற காரணத்தால் நாங்கள் கேள்வி நேரத்தில் வெளிநடப்பு செய்கிறோம் என்று கூறினார். திமுக உறுப்பினர் யாவரும் வெளியேறினர்.

## அமைச்சர் அழைப்பு

அமைச்சர் அரங்கநாயகம்; கடந்த காலத்தில் எதிர்க் கட்சிகளுக்குத் தரப்பட்ட உரிமைகளை விட இப்போது கேள்விகளானாலும் சரி கவன ஈர்ப்புத் தீர்மானமானாலும், உரிமைப் பிரச்சினையானாலும் அதிக வாய்ப்புகள் தரப்பட்டிருக்கின்றன. நல்ல உரிமைகள் தரப்பட்டிருக்கின்றன என்பதை உணர்ந்து எதிர்க்கட்சியினர் உள்ளே வந்து அமரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

## வியாழக்கிழமை சபாநாயகர் அறிக்கை

சபாநாயகர் முனுஆதி: வியாழக்கிழமையன்று கடந்த காலத்தில் நடந்த சட்டமன்ற முடிவுகளையும் இப்போது நான் அனுமதி அளித்துள்ள நிகழ்ச்சிகளையும் அவையில் நான் அறிவிக்கஇருக்கிறேன், அதைப் படித்த பிறகு அவர்கள் உணர்ந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்'' என்றார்.

# பிற்பட்டவருக்கு வேலை ஒதுக்கீடு: டெல்லி புறக்கணிப்பு

அமைச்சர் எட்மண்ட் தகவல்

சென்னை. மார்ச் 26. பிற்பட்டவர்களுக்கு வேலைவாய்ப்பில் இடம் ஒதுக்கீடு செய்யும் முறையை மத்திய அரசு நிறைவேற்றுவதில்லை என்று அமைச்சர் எட்மண்ட கூறினார்.

சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது அமைச்சர் எட்மண்ட் கூறியதாவது:

பிற்பட்டோர்நல வாரியம் அமைக்க மத்திய அரசிடம் ரூ. 5 கோடி கேட்டுள்ளோம். பிற்பட்டவர்களுக்கு வேலை வாய்ப்பில் இட ஒதுக்கீடு செய்ய விதிமுறை உள்ளது அந்த அதிகாரத்தின் அடிப்படையில் மாநில அரசு இட ஒதுக்கீடு செய்கிறது.

ஆனால் மத்திய அரசு இந்த விதிமுறைகளை நிறைவேற்றவில்லை எனவே பிற்பட்டவர்களுக்கு உரிய வேலை வாய்ப்பினை மத்திய அரசு ஒதுக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் எட்மண்ட் கூறினார்.

# தமிழக மக்களுக்கு வங்கிகள் அதிக கடனுதவி: அமைச்சர் கே ஏ கே கோரிக்கை

சென்னை, மார்ச் 26— தமிழகத்திலுள்ள நலிவடைந்த மக்களுக்கு கடனுதவி வழங்குவதில் வங்கிகள் அதிக அக்கறை காட்டவேண்டும் என்று அமைச்சர் கே. ஏ. கே. கேட்டுக் கொண்டார.

சைதை அண்ணா நடைபாதை வியாபாரிகளுக்கு தி வைசிய வங்கியின் சார்பில் அளிக்கப்பட்ட கடனுதவியை அமைச்சர் கே. ஏ. கே. வழங்கினார், விழாவுக்கு குடிசைமாற்று வாரியத் தலைவர் பி. ராமபத்திரன் தலைமை தாங்கினார்,

விழாவில் ஜி. கோவிந்தன், இ. சுப்பிரமணியம், ஏ லோகநாதன், மு.கிருஷ்ணன் ஆகியோர் பேசினர்.

அமைச்சர் கே ஏ கே பேசும்போது கூறியதாவது:-

இங்கே ஆளுக்கு 200 ரூபாய் என்று 81 பேருக்கு 16200 ரூபாய் கடனுதவி அளித்துள்ளனர்.

நலிந்தவர்களுக்குத்தான் நாங்கள் இந்த கடனுதவியை வழங்குகிறோம் என்று குறிப்பிட்டனர். அதற்காக நான் இவர்களை பாராட்டுகிறேன்.

தமிழகத்தில் 23 கிளைகளையும நாடு முழுவதும் 187 கிளைகளையும் இந்த வைசியா வங்கி பெற்றிருக்கிறது. தென்மாநிலங்களில் இந்த ஆண்டுக்குள் 220 கிளைகளை துவக்கப்போகிறோம் என்று சொன்னார்கள்,

இப்படிப்பட்ட கடனுதவிக்காக 15 லட்சம் ரூபாய் ஒதுக்கியுள்ளார்களாம் அதில் பெருமளவு தமிழகத்திற்கு ஒதுக்கப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

200 ரூபாய் என்பது சிறிய தொகையாக இருந்தாலும் அடித்தள மக்களுக்கு நம்பிக்கையூட்டும் கருவூலமாக அமைந்திருக்கிறது. இப்படிப்பட்ட சிறிய தொகையில் தொழிலை ஆரம்பித்தவர்களில் பலர் கோடிக்கணக்கான ரூபாய்களுக்கு அதிபதியாக தங்களின் விடா முயற்சியால் வளர்ந்து இருக்கிறார்கள். இந்த 81 பேர்களிலும் அப்படிப்பட்டவர்கள் இருக்கக்கூடும்.

சுதந்திரமடைந்த 30 ஆண்டுகளுக்குப் பிறகும் 200 ரூபாய் முதலீடு பெற முடியாதவர்களும் இருக்கிறார்கள், இப்படிப்பட்ட மேடு பள்ளங்களை போக்க முதல்வர் புரட்சித் தலைவர் பாடுபட்டு வருகிறார்.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. பேசினார்.

## ராமபத்திரன்

குடிசை மாற்றுவாரியத் தலைவர் பி. ராமபத்திரன் பேசும்போது கூறியதாவது:

வைசியர்களிடம் கடன் வாங்குவதுபெரிய காரியம் அவர்களே முன் வந்து கடனுதவி வழங்குவது பாராட்டுக்குரியது. கடனை வாங்கியவர்கள் திருப்பித் தந்துவிட்டு அடுத்து அதிகமாக வாங்கவேண்டும்

இவ்வாறு ராமபத்திரன் கூறினார்.

# கருணாநிதி-அன்பில்மீது சி.பி.ஐ. வழக்கு பற்றி சாந்திபூஷண் விளக்கம்

யூ, ஆர். கிருஷ்ணன் கேள்விக்கு பதில்

புதுடெல்லி, மார்ச் 26: சர்க்காரியா கமிஷன் அறிக்கைப்படி கருணாநிதி, அன்பில் தர்மலிங்கம் ஆகியோர் மீது வழக்கு தொடரப்பட்டிருப்பதாக மத்திய அமைச்சர் சாந்திபூஷன் கூறினார்.

சர்க்காரியா கமிஷன் அறிக்கையின் அடிப்படையில் எடுக்கப்பட்ட நடவடிக்கை குறித்து நாடாளுமன்றத்தில் கழகஉறுப்பினர் யூ. ஆர். கிருஷ்ணன் கேள்வி எழுப்பினார்.

அதற்கு சட்ட அமைச்சர் சாந்திபூஷன் பதிலளிக்கையில் சர்க்காரியா கமிஷன் அறிக்கைப்படி கருணாநிதி மீதும், அன்பில் தர்மலிங்கம்மீதும் 5-3.79 அன்று கோர்ட்டில் சி பி ஐ வழக்குப்பதிவுசெய்துள்ளது என்றார்.

## டெலிபோன் இணைப்பகம்

யூ ஆர் கிருஷ்ணனின் மற்றொரு கேள்விக்கு தகவல் துறை அமைச்சர் அத்வானி பதிலளிக்கையில் நடப்பு ஆண்டில் தமிழகத்தில் 70இடங்களில் தொலைபேசி இணைப்பகங்கள் (எக்ஸ்சேஞ்சுகள், திறக்கப்படும்'' என்றார்.

## தமிழில் வர்ணனை

கிரிக்கெட் போட்டி நேர்முக வர்ணனையை ஆங்கிலத்திலும், இந்தியிலும் தான் ஒலிபரப்ப முடியும். தமிழில் ஒலிபரப்ப முடியாது. சென்னையில் போட்டி நடைபெறும்போதுமட்டும் தமிழில் ஒலிபரப்பமுடியும் என்று யூ ஆர் கிருஷ்ணனின் மற்றொரு கேள்விக்குப் பதிலளித்து அத்வானி கூறினார்.

# கல்வி மானியக் கோரிக்கை

சென்னை. மார்ச் 26 சட்டசபையில் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் ரூ 208 கோடியே 53 லட்சத்து 13 ஆயிரத்துக்கான கல்வி மானியக் கோரிக்கையைச் சமர்ப்பித்தார்.

# பூட்டோ வழக்கு

ராவல்பிண்டி, மார்ச்26 தனக்கு விதிக்கப்பட்ட தூக்குத்தண்டனையைநிறைவேற்றுவதை நிறுத்திவைக்கவேண்டும் என்று பாகிஸ்தான் சுப்ரீம் கோர்ட்டில் பூட்டோ மனுச் செய்துள்ளார், அந்த மனு விசாரணையை பாகிஸ்தான் சுப்ரீம் கோர்ட் காலவரம்பின்றிஒத்திவைத்துள்ளது.

# அமைச்சர் ஆர். எம். வீ. தகவல்

[3-ம் பக்கத் தொடர்ச்சி]

ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டவர் தடையுத்தரவு வாங்கி இருப்பவர் ஒரு பொருட்டில்லை இருக்கிறார்.

கோவிலுக்கு எவ்வளவு வீடுகள் நிலங்கள் இருக்கிறது எவ்வளவு பணம் வருகிறது என்பது உங்களுக்கு தெரியாமலிருக்க நியாயமில்லை

நிர்வாக அதிகாரிகளை கேட்டால் கணக்கப்பிள்ளை மானேஜரை கேட்கிறார்.

கோவிலுக்கு எவ்வளவு வீடு என்று இருக்கிறது என்றால் 25 இருக்கலாம் என்கிறார், எங்கே என்றால் தெரியாது என்கிறார்.

## ஆளுக்கொரு நீதியா?

தனக்கு பிடிக்காதவர் தன் என்ற எண்ணத்தில் செயல்படக்கூடாது, விருத்தாசலத்தில் தனக்குப்பிடிக்காதவர் என்ற காரணத்தினால் 100 ரூபாய் வாடகையுள்ள கட்டிடத்திற்கு 710 ரூபாயாக உயர்த்தியிருக்கிறார்கள். ஒரு இடத்தில் பிடித்தவர்என்ற காரணத்திற்காக 10 ரூபாய் வாடகை 25 ரூபாயாக மாற்றியிருக்கிறார்கள். ஆனால் அதன் உண்மையான வாடகை 250 ரூபாயாகும்.

சென்னையில் 45 கிரவுண்டு ஆலய நிலத்தை ஆண்டிற்கு 4 ரூபாய் வீதம் வாடகைக்கு எடுத்த உத்தமர்கள் இன்றைக்கு பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

அதற்கு கிரவுண்டு விலை 50 ஆயிரம் ரூபாய் ஏறத்தாழ 20 லட்சம் ரூபாய் மதிப்புள்ள சொத்தை 180 ரூபாய் கொடுத்துவிட்டு அனுபவித்துக்கொண்டிருந்தார்.

5 ஆண்டுகால ஒப்பந்தம் முடிந்து விட்டது, ஆலயத்திடம் ஒப்படையுங்கள் என்றால் கோர்ட்டுக்குப் போய் இருக்கிறார்.

அவர்களெல்லாம் இப்படிச் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் நீங்கள் அரை வயிறு கஞ்சிக்கு ஆலாய் பறக்கிறீர்கள்,

## கொடுப்பதற்கு தயங்காத புரட்சித் தலைவர்

இந்தசொத்துக்களை பாதுகாக்க வேண்டியது உங்களுடைய கடமை. வருவாயைப் பெருக்க வேண்டியது உங்கள் கடமை தவறு செய்பவர்களைப்பற்றி தெரிவிக்க வேண்டியது. உங்கள் கடமை இதை மறந்தால் ஆண்டவன் தான் உங்களை காப்பாற்ற வேண்டும்

மனம் இருந்தால்மார்க்கம் உண்டு என்பார்கள் மனம் இருக்கிறது வருமானம் தான் இல்லை வர வேண்டிய வருமானம் வந்தால் அள்ளித்தர கொடுத்துக்கொடுத்துச் சிவந்த கரமுடைய புரட்சித்தலைவர் உங்களுக்கு தருவதற்கு தயங்கமாட்டார்.

உங்களுக்குச் சேர வேண்டியதை தரவிடாமல் தடுக்கும் பழம் பெருச்சாளிகளை அடையாளம் காட்டுங்கள்

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்

# குமரிமாவட்ட அண்ணசுமை தூக்குவோர் சங்கம்

நாகர்கோவில், மார்ச் 26- குமரிமாவட்ட அண்ணா வர்த்தக சுமை தூக்குவோர் சங்க அலுவலகத் திறப்பு விழா டாக்டர் ஜெயசீலன் மத்தியாஸ் தலைமையில் நடந்தது. சங்கத்தலைவர் எஸ். அன்னை குபேரசன் வரவேற்புரை யாற்றினார் நிதியமைச்சர் நாஞ்சிலார் அமைச்சரின் பேரவைச் செயலர் நாஞ்சில் வின்சென்ட். எம். ஜெ. வான், ராமசாமி, பீட்டர், பெஷி ராதாகிருஷ்ணன் ந.கோபாலன் மற்றும் பலர் பேசினர். 250 தொழிலாளர்களுக்கு டாக்டர் ஜெயசீலன் மத்தியாஸ் இலவச சீருடை அளித்தார். இந்த சீருடைகளை நிதியமைச்சர் நாஞ்சிலார் வழங்கிப் பேசினார்.

## மறுடெண்டர் அறிக்கை

சென்னை- 600 051, மாதவரம், மத்திய பால் பண்ணை காலனியைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கு ஓய்வு அறை கட்டுதல்" வேலைக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் 12-4-79 மாலை 3 மணி வரை வரவேற்கப்படுகின்றது.

டெண்டர் பத்திரங்கள், சென்னை-600 051- மாதவரம் மத்திய பால் பண்ணையில் 26-3-79 முதல் 11-4-79 வரை அலுவலக நேரங்களில் ரூ. 25/ மற்றும் விற்பனை வரி சேர்த்து செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்,

டேவணித்தொகை டெபாஸிட்: ரூ. 3.200/ டெண்டர் திறக்கப்படுதல்: சென்னை, 600 098, அம்பத்தூர் அம்பத்தூர் தொழிற்பேட்டை, பிளாட் எண் 29&30ல் தமிழ்நாடு பால்வள நிறுவனம் லிமிடெட், ஜெனரல் மானேஜர் அலுவலகத்தில் 12-4-79 மாலை 3-15 மணிக்கு திறக்கப்படும்.

ஜெனரல் மானேஜர்

Dipr/12818/79-16/FDS

## மத்திய பொதுப்பணித்துறை

சென்னை

நிர்வாகப் பொறியாளர் சென்னை மத்திய டிவிஷன் எண் II ம.பொ.ப.து. சாஸ்திரிபவனம், 26 ஹாடோஸ் சாலை சென்னை-6, அவர்களால் சென்னை அடையாறு CII காம்பஸில் தேசிய சோதனைக் கட்டிடம் கட்டுவதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள் 11-4 79 மாலை 3-மணிவரை வரவேற்கப்படுகின்றது. SH உட்புற குடிநீர் சப்ளை மற்றும் சுகாதாரவசதிகள் மற்றும் பாதாள சாக்கடை EC ரூ. 95,653/- நிபந்தனைகள் மற்றும் டெண்டர் பத்திரங்கள் ஆகியவை அவரது அலுவலகத்திலிருந்து ரூ. 20+வி.வரி மற்றும் சார்ஜ் சேர்த்து செலுத்தி (திருப்பப்பெற முடியாதது 9-4-79 வரை பெற்றுக் கொள்ளலாம்.

davp 635 (2741)/78

## மத்திய பொதுப்பணித்துறை

நிர்வாகப் பொறியாளர் சென்னை சென்ட்ரல் டிவிஷன் எண் ii ம. பொ. ப. து. சாஸ்திரிபவன், சென்னை-600 006 அவர்களால் சென்னை (ஆவடி) அலமாதி மத்திய கால்நடை உற்பத்தி பண்ணையில் உள்ள கால்நடை ஷெட் எண். 1, புதுப்பிப்பதற்கான வேலைக்கு முத்திரையிட்ட டெண்டர்கள் 7-4-79 மாலை 3 மணிவரை வரவேற்கப்படுகின்றது. S, H வெல்டட் ஸ்டீல்மெஷ் சேர்த்த ஸ்டீல் வென்டிலேட்டர்கள் அமைத்தல். E. C. ரூ. 30,540/- நிபந்தனைகள் மற்றும் டெண்டர் பத்திரங்கள் ஆகியவை அவரது அலுவலகத்திலிருந்து 6-4-79 வரை ரூ. 20/ + வி. வரி (திருப்பி அளிக்கப்படமாட்டாது) மற்றும் வருமானவரிகிளியரன்ஸ் சர்டிபிகேட், என்லிஸ்ட்மெண்ட் சர்டிபிகேட் ஆகியவற்றை செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்.

davp-635(2745)/78

---

ஆளுநர் பட்வாரி பாராட்டு

# இந்தியாவிலேயே சென்னை தான் சிறந்த நகரம்

சென்னை, மார்ச் 26- இந்தியாவிலேயே சென்னை நகரம் தான் இயற்கை எழில் மிகுந்து காணப்படுகிறது, மேலே இருந்து பார்த்தால் மரங்கள் மாடிகளை மறைத்து அழகுடன் விளங்குகிறது என்று ஆளுநர் பட்வாரி கூறினார்

சென்னை நேரு விளையாட்டு அரங்கம் அருகிலுள்ள மைலேடிஸ் தோட்டத்தில் 54ஆம் ஆண்டு மலர் கண்காட்சி ஆரம்ப விழா நடைபெற்றது.

அமைச்சர் காளிமுத்து தலைமையில் ஆளுநர் பட்வாரி கண்காட்சியை ஆரம்பித்துவைத்தார். மாநகராட்சி தனி அதிகாரி ராமதாஸ் வரவேற்றார். ஆணையர் ஆறுமுகமும் கலந்து கொண்டார். தோட்டக்கலைஞர் கோவிந்தராசன் நன்றி கூறினார்

ஆளுநர் பட்வாரி சிறந்த முறையில் தோட்டங்களை பராமரித்தவர்களுக்கு பரிசுகள் வழங்கினர்.

போக்குவரத்து தீவுகளை பராமரித்து சிறந்த முறையில் அழகுபடுத்தியுள்ளதற்காக இந்தியன் ஓவாசிஸ் வங்கிக்கு (இவர்கள் வாணிமகால் எதிரிலுள்ள திட்டை பராமரிக்கின்றனர்) தாமரை பூவேலைப்பாடு மிக்க சுழற்கேடயம் அளிக்கப்பட்டது.

மாநகராட்சி ஊழியர்கள் மைலேடிஸ் பூங்காவை பராமரிக்கிறார்கள் அதற்கு மேயர்கள் சார்பான சுழற்கேடயம் அளிக்கப்பட்டது

பள்ளித் தோட்டப் போட்டியில் வெற்றி பெற்ற அகரம் சோமையராஜா தெருவிலுள்ள மாநகராட்சிபள்ளிக்கும், இரண்டாவது பரிசு ஆள்வார் பேட்டை, பீயண்ணன் பேட்டை மாநகராட்சிபள்ளிக்கும் மூன்றாவது பரிசு நொச்சிக்குப்பம் மாநகராட்சிதுவக்கப் பள்ளிக்கும் வழங்கப்பட்டது.

### ஆளுநர்

ஆளுநர் பட்வாரி பேசும் போது கூறியதாவது:

இங்கே பலவித மலர்களைக்கொண்டு கண்காட்சி அமைத்திருக்கிறார்கள். கவிஞர்களும், குழந்தைகளும், பெண்களும் மலர்களை மிகவும் விரும்புவார்கள்.

நான் பல நாடுகளை நகரங்களை பார்த்திருக்கிறேன். ஆனால் சிறந்து விளங்குவது சென்னை நகரம். ஒரு நாள் ஹெலிகாப்டரில் சென்னையை சுற்றிப் பார்த்தேன், நகரமே மரங்களில் மூழ்கி கிடக்கிறது, கடைகள், மாடிகள் எல்லாம் மரங்களுக்கு கீழே மறைந்து கிடக்கிறது.

மாணவர்கள் அவசியம் கண்காட்சியை பார்க்க வேண்டும் அவர்களின் கல்வி வளர்ச்சிக்கு மட்டுமின்றி பொது அறிவுக்கும் இந்த கண்காட்சி உதவும்,

இவ்வாறு ஆளுநர் பட்வாரி கூறினார்.

### காளிமுத்து

அமைச்சர் காளிமுத்து பேசும்போது கூறியதாவது:

மலர்கள் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் வகையில் அமைக்கப்பட்டிருக்கிறது. மலர்கள் தமிழக மக்களின் வாழ்வோடு இணைந்திருக்கிறது. நிலங்களை பிரிக்கும்போது கூட மலர்களை வைத்தே பிரித்திருக்கிறார்கள்.

போர்முனையில் பகைவர்களை சந்திக்கும்போது கூட மலர்களை அணிந்து சென்றனர். வெற்றிபெற்றவனை வாகை சூடினான் என்றுதான் சொல்வார்கள்.

மலர்கள்வாடிப்போகாமல் கண்காட்சி அமைத்திருப்பதை பாராட்டுகிறேன்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

மலர் கண்காட்சி வரும் 31ந் தேதி வரை நடைபெறுகிறது மக்கள் இலவசமாக அனுமதிக்கப்படுகிறார்கள்.

---

அமைச்சர் பொன்னையன் தகவல்

# சென்னையில் ரூ6கோடி செலவில் கப்பல் பழுது பார்க்கும் கூடம்

சென்னை. மார்ச் 26 சென்னையில் 180 கிலோ மீட்டர் கப்பல பழுது பார்க்கும் கூடம் 6 கோடி ரூபாய் செலவில் அமைக்கப்படும் திட்டம் மத்திய அரசின் தீவிர பரிசீலனையில் இருக்கிறது என்று அமைச்சர் பொன்னையன் சட்டசபையில் அறிவித்தார்.

சென்னை துறைமுகத்தில் 180 மீட்டர் கடபல் பழுது பார்க்கும் (டிரைடாக்) கூடம் அமைக்க வேண்டியது அவசியம் என்று இவ்வரசு கருதுகிறது

சென்னையில் உள்ள கப்பல்கள் பழுதுபார்ப்பதற்கென பம்பாய்க்கும் கல்கத்தாவிற்கும் அனுப்பப்படவேண்டியுள்ளது

இதனால் நிறைய காலம் வீணாவது மட்டுமல்லாமல், நிறைய செலவும் ஆகிறது.

சென்னையில் கப்பல் பழுதுபார்க்கும் கூடம் அமைக்க எல்லா அடிப்படை வசதிகளும் அமைந்திருக்கின்றன,

இதைத் துவக்குவதன் மூலம் பயிற்சி பெற்ற தொழில்நுட்ப வல்லுநர்களுக்கும், வேலை இல்லாதிருப்பவர்களுக்கும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்க முடியும்

கப்பல் பழுதுபார்க்கும் நிலையம் சென்னையில் அமைப்பதன் மூலம் அதற்குத் தேவையான உதிரிப் பொருட்களைத் தயாரிக்க பல சிறு தொழில்களும் உபதொழில்களும் தமிழ் நாட்டில் வளர வழிபிறக்கும்.

இந்த திட்டத்திற்கு 631 லட்சம் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கின்றது இது குறித்து இம்மாநில அரசு எடுத்துக் கொண்ட பெருமுயற்சிகளின் காரணமாக 180 மீட்டர் அகல கப்பல் பழுதுபார்க்கும் கூடம் அமைக்கவேண்டும் என்ற கோரிக்கை மைய அரசின் தீவிர பரிசீலனையில் உள்ளது.

### பாடல்கள் கேட்கலாம்

மத்திய அரசு 120மீட்டர் டிரைடாக் அமைக்கலாம் என்று கூறியது 180மீட்டர் இருந்தால்தான் பெரிய கப்பல்களைப் பழுதுபார்க்க முடியும் இல்லாவிட்டால் பம்பாய், கல்கத்தாபோன்ற இடங்களுக்கு அனுப்ப வேண்டியிருக்கும்

விரைவு பேருந்துகளில் மெல்லிசைகள் ஒலிபரப்பப்படுவதால் ஓட்டுநர்களுக்கு இடையூறு எதுவும் ஏற்படக்கூடாது என்று கூறப்பட்டிருக்கிறது.

இப்போது பல்லவன் பஸ்கள் 2 பாண்டியன் போக்குவரத்து கழக பஸ்கள் 2 அண்ணா போக்குவரத்துக்கழக பஸ்கள் 2 கட்டபொம்மன் போக்குவரத்துக் கழக பஸ்கள் 6, பெரியார் போக்குவரத்துக் கழக பஸ்கள் 2 ஆகியவற்றில் டேப் ரெகார்டர்கள் மூலம் மெல்லிசை ஒலிபரப்பப்படுகின்றன. மற்ற போக்குவரத்துக் கழகங்களில் அமைப்பது குறித்து பரிசீலிக்கப்படும். கருத்துள்ள பாடல்கள் இவற்றின் மூலம் ஒலிபரப்பப்படும்.

நல்ல பத்திரிகைகளும் பஸ்பயணிகள் படிப்பதற்கு வழங்கப்படும்.

சென்னை பஸ்களில் திடீர் சோதனை நடத்தியது போல வெளியூர் பஸ்களிலும், திடீர் சோதனை நடத்தி நடவடிக்கைஎடுக்கப்படும்.

(6-ம்பத்தி தொடர்ச்சி)

கங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இந்த கூட்டுறவு சங்கங்களில் உறுப்பினர்கள் ஒவ்வொருவருக்கும் 4 ஆயிரம் ரூபாய் வரை கடனுதவி அளிக்கப்படுகிறது.

இந்ததகவலைமாவட்ட ஆட்சித்தலைவர் பி.எஸ். பாண்டியன் கூறினார்.

---

# தமிழகத்தில் மின்வெட்டு வராது

அமைச்சர் பண்ருட்டி அறிவிப்பு

திருச்சி, மார்ச் 26- தமிழ் நாட்டில் மின்சார வெட்டு வராது என்று மின்சாரத் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் அறிவித்தார். கடந்த சில தினங்களாக தினந்தோறும் சிலமணி நேரம் மின்சார சப்ளை நிறுத்தி வைக்கப்பட்டு இருப்பது ஒரு தற்காலிக அம்சமே என்றும் அவர் கூறினர்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

அளிக்கப்பட்டது. தலா 4 ஆயிரம் ரூபாய் வீதம் 60 ஆயிரம் ரூபாய் கடனுதவி அளிக்கப்பட்டது,

### காது கேட்கும் கருவிகள்

காதுகேளாத எண்பத்து ஏழு பேருக்குகாது கேட்கும் கருவிகள் கொடுக்கப்பட்டன இதன் மதிப்பு 50 ஆயிரம் ரூபாயாகும்.

ஊனமுற்றோருக்கு உதவுவதற்காக ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா, கனரா வங்கி, இந்தியன் ஓவர்சீஸ் வங்கி ஆகியன 10 ஆயிரம் ரூபாய் கடனுதவி வழங்கின.

அமைச்சர் பி. டி. சரஸ்வதி இந்த கடனுதவி, காது கேட்கும் கருவிகளை வழங்கினர்.

சிறந்த முறையில் கலை நிகழ்ச்சிகளை நடத்திய பள்ளிகளுக்கும் மாறுவேடப் போட்டியில்கலந்து கொண்டு வெற்றிப்பெற்ற மாணவர்களுக்கும் அமைச்சர் பி.டி. சரஸ்வதி பரிசுகள் வழங்கினார்.

முன்னதாக ஊனமுற்ற பள்ளி மாணவ மாணவியரின் கலைநிகழ்ச்சிகள் நடந்தது. இதில் ஆயிரத்து 200 பேர் பங்கேற்றனர். இவர்களுக்கு பல நிறுவனங்கள் இலவசசீருடைகளை வழங்கியுள்ளன.

தமிழ் நாட்டில் மின்சார வெட்டு வராது என்று மின்சாரத் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் திருச்சியில் அளித்த பேட்டி ஒன்றில் திட்டவட்டமாகக் குறிப்பிட்டார்.

கடந்த சில தினங்களாக சில மணி நேரம் மின்சார சப்ளை நிறுத்தி வைக்கப்பட்டதற்கு காரணம் எண்ணூர் அனல்மின் நிலையத்தில் ஏற்பட்ட சிலகோளாறுகளே என்று விளக்கிய அமைச்சர் பண்ருட்டி இப்போது அங்கு மின்சார உற்பத்தி மீண்டும் ஆரம்பமாகிவிட்டது என்றும் கூறினார். நெய்வேலி அனல் மின்சார நிலையத்திலும் சுரங்க வெட்டில் ஏற்பட்ட சில சிக்கல்கள் காரணமாக மின்சார உற்பத்தி குறைந்தது என்றும் இங்கும் உற்பத்தியை பெருக்குவதாக வாக்களித்திருக்கிறார்கள் என்றும் அமைச்சர் கூறினார்.

புனல் மின்சார நிலைய உற்பத்தி திருப்திகரமாக உள்ளது, எனவே தமிழ் நாட்டில் மின்சார வெட்டு கொண்டு வரும் உத்தேசம் எதுவும் இல்லை என்றும் அமைச்சர் பண்ருட்டி கூறினார்.

### தூத்துக்குடி அனல்மின் நிலையம்

தூத்துக்குடி அனல் மின் நிலையத்தின் முதலாவது பிரிவில் வருகிற மேமாத இறுதிக்குள் உற்பத்தி ஆரம்பமாகிவிடும். இதன் மூலம் மே மாதத்திலிருந்து கூடுதலாக 210மெகாவாட் மின்சாரம் கிடைக்கும்.

அதையடுத்து தமிழ் நாட்டில் மின்சார நிலவரம் மேலும் அபிவிருத்தி அடையும் என்றும் பண்ருட்டி கூறினர்.

தூத்துக்குடியில் இரண்டாவது பிரிவில் இந்த வருட இறுதிக்குள் உற்பத்தி ஆரம்பமாகும் என்றும் அமைச்சர் பண்ருட்டி தெரிவித்தார்.

---

டெல்லியில்

### அமைச்சர்கள் எம்.பி.க்களுடன் அமிர்தலிங்கம் சந்திப்பு

புதுடெல்லி, மார்ச் 26- இந்தியா வந்துள்ள இலங்கை தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் புதுடெல்லியில் மத்திய அமைச்சர்கள். எம்.பிக்களை நேற்று சந்தித்துப் பேசினர்.

பாராளுமன்ற சபாநாயகர்கள் ஹக்டே, மூராரி, மத்திய அமைச்சர்கள் ஜெகஜீவன்ராம், வாஜ்பாயி, பா. ராமச்சந்திரன், நாடாளுமன்ற உறுப்பினர்கள் பாலா பழனூர், மோகனரங்கம், விசுவநாதன், பார்வதி கிருஷ்ணன், ஏ.பி. ஜனார்த்தனப ஆர். வி. சுவாமிநாதன், ராமமூர்த்தி, கோபால், வயலார் ரவி, மவுலங்கர், டி. ஏ. பை, சாஸ்திரி, பிரும்மானந்த ரெட்டி, சவான் மற்றும் டெல்லி வந்திருந்த நெடுமாறன் ஆகியோரை சந்தித்தார.

இன்று இரவு அமிர்தலிங்கம் சென்னை திரும்புகிறார்

---

தென்னாற்காட்டில்

### கிராம கூட்டுறவு வீட்டு வசதி சங்கங்கள்

கடலூர், மார்ச். 26- கிராமப்புறங்களில் ஏழை மக்கள் வீடுகள் கட்டுவதற்கு கடன் வழங்க தமிழக அரசு புதிய திட்டம் ஒன்றினை தயாரித்துள்ளது

இந்தத்திட்டத்தின் கீழ் தென்னாற்காடு மாவட்டத்தில் கடலூர், விருத்தாசலம், விழுப்புரம், திண்டிவனம், கள்ளக்குறிச்சி, செஞ்சி ஆகிய இடங்களில் கிராம கூட்டுறவு வீட்டுவசதி சங்

(4-ம் பத்தி பார்க்க)

---

# ஊனமுற்றோருக்கு ரூ70ஆயிரம்கடனுதவி பி. டி. எஸ். வழங்கினர்

சென்னை, மார்ச் 26- ஊனமுற்றோர்வாழ்வு வளம் பெறும் வகையில் 70 ஆயிரம் ரூபாய் கடன் உதவித் தொகையை அமைச்சர் பி. டி. சரஸ்வதி வழங்கினர்.

ஊனமுற்றோர் இருபத்திரண்டு பேருக்கு நிதி உதவியாக இலவசமாக 34 ஆயிரம் ரூபாயை உடல் ஊனமுற்றோர் மாநில வாரியம் வழங்கியது. இந்தத் தொகையை சமூக நலத்துறை அமைச்சர் பி. டி.சரஸ்வதி வழங்கினர்.

ஊனமுற்றோர் உலக நாள் விழாவையொட்டி ஊனமுற்ற பள்ளி மாணவ மாணவியர்களின் கலை நிகழ்ச்சியும் பொதுக் கூட்டமும் நேற்று கலைவாணர் அரங்கில் நடந்தன.

### அரங்கநாயகம்

பொதுக் கூட்டத்திற்கு வந்தவர்களை சமூக நலத்துறை இணைச் செயலாளர் எஸ். ரெங்கமணி வரவேற்றார், அமைச்சர் பி. டி. சரஸ்வதி தலைமையில், அமைச்சர் அரங்கநாயகம் பாங்க் ஆப் பரோடாவின் பிராந்திய மேலாளர் ஜி. சங்கரநாராயணன், ஊனமுற்றோர் மாநில வாரிய செயலாளர் ஏ. பிச்சை ஆகியோர் பேசினர். என். ஈ. எஸ். ராகவாச்சாரி நன்றி கூறினர்.

டி. ஐ. சைக்கிள் நிறுவனம், பெரம்பூர் ரயில் பெட்டி தொழிற்சாலை, பின்னிநிறுவனம், செஷயர் ஹோப்ஸ் இந்தியா ஆகியவை உடல் ஊனமுற்றவர்களை கணிசமான அளவில் வேலையில் சேர்த்துக் கொண்டதைப் பாராட்டி மாநில விருதுகள் வழங்கப்பட்டன.

### நிம்கர் விருது

இதுபோன்றே, இந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ் நிறுவனம், தருமபுரி மாவட்ட கூட்டுறவு சர்க்கரை ஆலை, ரீஜினல் பிராவிடண்ட் பண்ட் ஆணையாளர் அலுவலகம் கும்பகோணம் சேக்ரெட் ஹெர்ட் தொழு நோயாளர் நிலையம் ஆகியவற்றிற்கு நிம்கர் விருதுகள் வழங்கப்பட்டன.

டால்மியா மேக்னசைட் கழகத்துக்கு சிறப்பு விருதும், சால்வேஷன் ஆர்மி கேதரின் பூத் மருத்துவமனைக்கு வெள்ளி சுழற் கேடயமும், பல்லவன் போக்குவரத்து கழக (மெட்ரோ) பிரிவிற்கு ஏ. எம்.எம். முருகப்ப செட்டியார் சுழற்கோப்பையும் அளிக்கப்பட்டது.

ஊனமுற்றோரில் சிறந்த பணியாளர்களாக தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்துபேருக்கு மாநில விருதும் நான்கு பேருக்கு நிம்கர் விருதும் ஊனமுற்றவர்களுக்கான பள்ளிகளில் சிறப்பாக பணிபுரிந்த நான்கு பள்ளி ஆசிரியர்களுக்கு மாநில விருதும் வழங்கப்பட்டது.

மாநில நிம்கர் விருதுகள் சுழற்கேடயங்களை அமைச்சர் அரங்கநாயகம் வழங்கினர்.

### இலவச நிதி உதவி

சமூக நலத்துறையின் கட்டுப்பாட்டின் கீழ்இயங்கும் ஊனமுற்றோர் மாநில வாரியம் 22 பேருக்கு 34 ஆயிரம் ரூபாய் நிதி உதவியை அளித்தது. உடல்ஊனமுற்றோர் தங்களது வாழ்க்கையை வளம் பெறச் செய்ய இலவசமாக இந்த நிதி உதவியை அளித்தது.

இந்த ஆண்டு ஆயிரம் உடல் ஊனமுற்றோருக்கு பெட்டிக்கடை அமைத்துக் கொடுக்கும் திட்டத்தின் கீழ் இதுவரை 44 பேர் தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.

இந்தசுயவேலைவாய்ப்புத் திட்டத்தின்கீழ் 15பேருக்கு பரோடா வங்கி கடனுதவி

(4-ம் பத்தி பார்க்க)

---

# அண்ணா







### மைத்துனர் - உறவினர் பெயரைப் பயன்படுத்தி தில்லுமுல்லு

# கோவில் நிலங்களில் பினாமி மோசடி செய்த அரசியல் தலைவர்

## அமைச்சர் ஆர். எம். வீ. தகவல்

**சேலம், மார்ச் 26- கோவில் நிலங்களை மைத்துனர் உறவினர் பெயர்களில் ஒரு கட்சியின் தலைவர் வைத்துள்ளார் என்ற தகவலை அமைச்சர் ஆர். எம். வீ. தெரிவித்தார்.**

தமிழ்நாடு ஆலய ஊழியர்கள் சங்க மாநாட்டில் அமைச்சர் ஆர். எம். வீ. பேசும்போது கூறியதாவது:

துரை கோவிந்தராசன் உங்கள் வேண்டுகோளைப் பற்றி உணர்ச்சி பொங்க எடுத்துரைத்தார். உங்கள் வேண்டுகோள் உங்கள் கோரிக்கைகள் பற்றி முடிவு செய்து அறிவிக்கும் பொறுப்பு இங்கே இருக்கும் முதல்வர் அவர்களுக்கே இருக்கிறது.

நான் உங்களுக்கும், முதல்வருக்கும் மத்தியில் இருந்து உங்களின் நியாயமான வேண்டுகோளை எடுத்துச் சொல்வேன். உங்களுக்காக ஒரு வழக்கறிஞனாக பணியாற்றுவேன்.

தமிழகத்தில் 50 ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆலயங்கள் இருக்கின்றன. இந்தியாவின் எந்த மாநிலத்திலும் இந்த அளவு ஆலயங்கள் இல்லை. கோவில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பதால் தானோ என்னவோ ஒவ்வொரு ஊரிலும் ஒரு கோவில் மட்டுமல்ல. விருப்பத்திற்கேற்ப பல கோவில்கள் உள்ளன.

ஆனால் அறநிலையத் துறைக்குள் வந்திருக்கும் ஆலயங்களின் எண்ணிக்கை 25 ஆயிரம் தான்.

### பணியாளர் எண்ணிக்கை

அந்தக் கோவில்களை வருமான அடிப்படையில் 201 ரூபாயிலிருந்து 1000 ரூபாய் வருமானம் வரை ஒரு பிரிவு. 1001லிருந்து 5 ஆயிரம் ரூபாய் வரை ஒரு பிரிவு. 5001லிருந்து 20 ஆயிரம் வரை ஒருபிரிவு 20001லிருந்து 60 ஆயிரம் வரை ஒரு பிரிவு, 60000 லிருந்து ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் ஒரு பிரிவு என பிரித்திருக்கிறோம்.

25 ஆயிரம் கோவில்களிலும் உள்துறை, வெளிதுறை பணிகளில் ஈடுபட்டு இருப்பவர்களின் எண்ணிக்கை 50,972பேர்.

ரூ 201-1000 வரை வருமானமுள்ள கோவில்களில் 20,652 பேரும், ரூ 1001-5000 வரைவருமானமுள்ள கோவில்களில் 10 ஆயிரம் பேரும், ரூ 5001-20000 வரை வருமானமுள்ள கோவில்களில் சுமார் 7 ஆயிரம் பேரும் ரூ 20001-60000 வரை வருமானமுள்ள கோவில்களில் சுமார் 4400 பேரும் பணியாற்றுகிறார்கள். 60 ஆயிரத்திலிருந்து ஒரு லட்சத்துக்கு மேற்பட்ட வருமானமுள்ள கோவில்களில் மீதமுள்ளவர்கள் பணியாற்றுகிறார்கள்.

இங்கு பணியாற்றுபவர்கள் 42 ஆயிரம் பேர். எங்களை அரசு அலுவலர்களாக தீர்மானித்து அவர்களுக்கு உள்ள சலுகைகளை எங்களுக்கும் அளிக்க வேண்டும் என்று கேட்டிருக்கிறீர்கள். அப்படி அறிவிப்பதில் பிரச்சினை இல்லை.

### கலைச் செல்வ பாதுகாப்பு

கிராமங்களில் உள்ள தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கின்ற பகுதிகளில் உள்ள கோவில்களுக்கு 1,000 ரூபாய் ஆலய திருப்பணிக்காக அரசு வழங்கலாம் என்று விதி இருக்கிறது இதுவரை சுமார் 45 ஆயிரம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம்.

இதைச் சொன்னால் மேலவையில் நல்லசிவம், இது மத சார்பற்ற நாடு, எனவே பணம் தருவது எப்படி நியாயமாகும்? என்று கேட்கிறார். கிராமங்களில் ஆண்டாண்டு காலமாக வணங்கப்பட்டு வரும் தாழ்த்தப்பட்ட அரிசன மக்களின் சிறிய கோவில்களை பராமரிக்க 1,000 ரூபாய் தருவது தவறு என்கிறார்கள்.

இந்தப் பணம் பொது நிதியிலிருந்து அளிக்கப்படுவது அல்ல பக்தர்கள் தருவதை சிறிய கோவில்களுக்குத் தருகிறோம்.

கலைச்செல்வங்களை பாதுகாக்கும் பொறுப்பை மட்டும் தான் அரசு ஏற்றுக் கொண்டுள்ளது

கோவில் கட்டிடங்களை வாடகைக்கு பயன்படுத்தி வருவது அரசைவிட ஆலய ஊழியர்களான உங்களுக்கு நன்றாகத் தெரியும்

அவர்களிடம் பெறப்படும் வாடகை எவ்வளவு? அதன் பக்கத்திலேயே உள்ள தனியார் கட்டிடத்தின் வாடகை எவ்வளவு என்பது உங்களுக்குத் தெரியும்.

சென்ற ஆண்டு சட்டமன்றத்தில் தெரிவித்தேன். ஒரு காலத்தில் தரும சிந்தனையுடன் ஆலயங்களுக்கு அறக்கட்டளையாக கொடுத்தார்கள். ஆனால் இன்றைக்கு அது பிள்ளையில்லா சொத்தைப் போல் சூறையாடப்படுவதை முதல்வர் அனுமதிக்க மாட்டார்.

வாடகையை உயர்த்த அரசு சட்டம் கொண்டு வந்தால் ஆண்டவனுக்கு ஒரு சட்டம், மக்களுக்கு ஒரு சட்டமா? என்று மார்க்சிஸ்ட் கட்சியினர் கேட்டனர்

உங்களை அரசு பணியாளர்களாக ஆக்க வேண்டும் என்று கேட்கிற அதே உறுப்பினர்கள் வாடகையை உயர்த்துவதற்குக் குறுக்கே நிற்கிறார்கள்.

சட்டமன்றத்திற்கு பல பேர் வந்திருக்கிறார்கள் நல்லவேளை அவர்களை நீங்கள் தலைவர்களாகப் பெறவில்லை.

ஆலயத்தில் பணியாற்றும் 60 ஆயிரம் பேர்களுக்கு குடும்பம், பிள்ளை இல்லையா?

500 பேர் வேலைசெய்யும் தொழிற்சாலையில் வேலை நிறுத்தம் என்றால் நகரம் மட்டுமல்ல நாடே அமளிபட நினைக்கும்போது ஒரு லட்சம்பேர் உள்ள ஆலய ஊழியர்களின் குறைகளை தீர்க்க நடவடிக்கை எடுக்கும்போது குறுக்கே நிற்கிறீர்களே ஏன்?

### பழைய தவறு

அதற்கு இந்தஒருலட்சம் பேர்களையும் அரசு ஊழியர்களாக ஆக்கிவிடுங்கள் என்கிறார்கள் 'பூனைக்கும் தோழன் பாலுக்கும் காவல்' என்பதை இன்றைய அரசியலில் நிதர்சனமாக காண்கிறோம்

நீங்கள் உங்கள் கோரிக்கைகளை நாங்கள் கூர்ந்து கவனிக்கவேண்டும் என்பதற்காகபுள்ளிவிவரங்களுடன் தந்திருக்கிறீர்கள் இந்த குறைந்த சம்பளம் என்றைக்கோ 2 ஆண்டுகளில் வந்ததா?

யார் வைத்த கொள்ளியோ வீடு வந்து சேர்ந்தது என்பது போல எப்போதோ செய்த தவறு புரட்சித்தலைவர் மீது விழுந்திருக்கிறது.

யுனிவர்சிட்டி கிராண்ட் கமிஷன் அறிக்கை வந்தபோது நிறைவேற்ற கோரி பட்டதாரி ஆசிரியர்களை சிறையில் அடைத்து எழுதி வாங்கிய முன்னாள் முதல்வர் இன்று அவர்களுக்காக பரிந்து பேசுகிறார்.

1959ம் ஆண்டு வந்த இந்து அறநிலையச் சட்டம் சரிவர கடைப்பிடிக்கப்படாததால் 30 ஆண்டு காலத்துக்குறைகள் இந்த ஆட்சியின்மீது வந்து விழுந்திருக்கிறது

தஞ்சை மாவட்டத்தில் மட்டும் ஒன்றேமுக்கால்லட்சம் ஏக்கர் கோவில் நிலம் உள்ளது. அவைகளை அனுபவித்து வருபவர்கள்யார்? ஒருவர் 5 ஏக்கருக்கு மேல் வைத்திருக்கக்கூடாது என்பது விதி, அது கடைப்பிடிக்கப்படுகிறதா?

### அரசியல் தலைவரின் இரட்டை வேடம்

விவசாயிகளின் தோழன் என்று சொல்லிக்கொள்ளும் ஒரு கட்சியின் தலைவர் தன் பெயரிலும், மைத்துனர், உற்றார், உறவினர் பெயர்களில் வைத்திருக்கும் கோவில் நிலம் 30 ஏக்கர்.

ஆலயத்திற்கு அவர்கள் தரவேண்டியது 30ஆயிரம் ரூபாய்அங்கேபாக்கிஇங்கே வந்து ஆலய ஊழியர்களை அரசு ஊழியர்களாக ஆக்கு என்கிறார்

இந்த இரட்டை வேட அரசியல் தலைவர்களைப் புரிந்து கொள்ள வேண்டும்

அறநிலையகுத்தகைபாக்கி சென்ற ஆண்டு முடிய 20 கோடி ரூபாயாகும் சட்டமன்றத்தில் பாக்கிகளை ரத்து செய் என்கிறார்கள் 30 ஏக்கர் நிலம்வைத்திருப்பவர்களின் 30 ஆயிரம் ரூ. உட்பட 20 கோடி ரூபாய் இந்த ஆலயங்களுக்கு வர வேண்டியது இருக்கிறது இதை வைத்துக் கொண்டிருப்பவர்கள் உங்கள் சம்பளத்தைவைத்துக்கொண்டிருக்கிறார்கள்

நீங்கள் அரை வயிற்றுடன் பணியாற்றிக் கொண்டிருக்கிறீர்கள் அவர்கள் கடன்களை ரத்துசெய் என்கிறார்கள்

### தடைகள் உடையும்

உங்கள் பிரச்சினைகளைத் தீர்க்க யார்யார் தடையாக இருக்கிறார்களோ எது தடையாக இருக்கிறதோ அந்த தடைகள் நீக்கப்படும்

(பலத்த கைதட்டல்)

உங்களுக்குதரவேண்டிய பணத்தை- உங்கள் சம்பளத்தை அல்லவா குத்தகை பாக்கிதாரர்கள் வைத்திருக்கிறார்கள்? ஆலய சொத்தை அழிக்க திருட- ஏமாந்தால் எடுத்துக் கொள்ள நினைக்கிறார்கள் அது நடக்காது.

உங்கள் கோரிக்கை பரிசீலனையில் இருக்கிறது. அரசாங்க பிரச்சினை மட்டுமல்ல. வேறு சில பிரச்சினைகளும் இருக்கிறது.

12 கிரேடாகஇருப்பதை 6 கிரேடாக மாற்ற ஆணையர் பரிசீலித்துக் கொண்டிருக்கிறார்.

பணிகாலத்தில் இறப்பு ஏற்பட்டால் இன்சூரன்ஸ் மூலம் கிடைக்க வேண்டிய தொகையை ஆலய ஊழியர்களுக்கும் தரமுடியுமா என்று ஆணைபிறப்பித்தார்.

### மீண்டும் பேச்சு

அரசு ஊழியர்களுக்கு சில விதிகளை ஏற்று செயல்படுத்திய இன்சூரன்ஸ் நிறுவனம் ஆலய ஊழியர்களுக்கு மறுத்து விட்டது மீண்டும் ...

... கொண்டிருக்கிறோம்.

(பலத்த கை தட்டல்)

சில பேர் உண்ணாவிரதம் இருந்தால் தெரிந்து விடும் என்கிறார்கள். உண்ணாவிரதமிருந்தால் பசிதான் தெரியும் பிரச்சினை தீராது.

உங்கள் பிரச்சினைகள் இந்த முதல்வர் காலத்தில் தீர்க்கப்படவில்லையென்றால் பின்னர் கடந்த 30 ஆண்டுகளை போலத்தான் ஆகும். அந்த ஆண்டவனே வந்தாலும் தீர்க்க முடியாது

திருத்தணிகோவிலிலிருந்து ஒழுங்கு நடவடிக்கை எடுத்து டிஸ்மிஸ் செய்யப்பட்டவர்கள் உங்களுக்கு எதிரான சங்கத்திலே பொறுப்பிலே இருக்கிறார்கள் வேறொரு ஆலயத்தில்

(2-ம் பக்கம் பார்க்க)

## ஊனமுற்றோர் விளையாட்டுபோட்டி: அமைச்சர் பி.டி.எஸ். பரிசு வழங்கினர்

சென்னை, மார்ச் 26- ஊனமுற்றோர் உலக நாள் விழாவையொட்டி உடல்ஊனமுற்றோருக்கான பல்வேறு விளையாட்டுப் போட்டிகள் நேற்று பிற்பகல் எழும்பூர் ராஜரத்தினம் விளையாட்டரங்கத்தில் நடந்தது.

விளையாட்டுபோட்டியை சமூக நலத்துறை இயக்குநர் சி. கே. கரியாலி ...

... முற்றோருக்கான வேலைவாய்ப்பு நிலையங்களில் இருப்பவர்கள் இந்தப் போட்டியில் கலந்து கொண்டனர்.

போட்டியில்வெற்றிபெற்றவர்களுக்கு அமைச்சர் பி. டி. சரஸ்வதி பரிசுகள் வழங்கிப் பேசினார் விழாவிற்கு வந்தவர்களை என். இ.எஸ் ராகவாச்சாரி வர ...





தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி ...